உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கோநகர்
# ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர்
# திருவூடல் வர்ணனை



சௌமிய ஆண்டு

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பஞ்சபுராணத் துதிப் பாடல்கள்

## கற்பக விநாயகர் துதி

தனயன் வேண்டினும் சம்பத்து வேண்டினும்
மனையை வேண்டினும் வான்பயன் வேண்டினும்
கனைவ ளங்கொள் கணேச புரேசனை
இனிய கற்பக மூர்த்தியை ஏத்துமே.

— சொக்கலிங்க ஐயா

## தேவாரம்

அண்ணல் ஆலவாய், நண்ணி னுன்தனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே.

— சம்பந்தர்

## திருவாசகம்

காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.

— மாணிக்கவாசகர்

## திருவிசைப்பா

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன் தன்னையுமாட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளும் தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே சேர்ந்திருக்கை ஆயிற்றே.

— பூந்துருத்தி நம்பிகாட நம்பி

## திருப்பல்லாண்டு

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த
தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண்டிற் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத்திரள் மேருவிடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

— சேந்தனார்

## பெரியபுராணம்

ஆலமே அமுத மாக உண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை அடியேற் கின்று
ஞாலநின் புகழே யாக வேண்டுநான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆல வாயிற் சிவபெரு மானே என்றார்.

— சேக்கிழார்

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கோநகர்

ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர்

# திருவூடல் வர்ணனை






வெளியிட்டவர்கள் :-

சு. மு. ராம. முரு.

சுப. முருகப்ப செட்டியார்

முரு. இராமநாதன் செட்டியார்

முரு. இராதாகிருஷ்ணன் செட்டியார்

சௌமிய ஆண்டு

உ
சிவமயம்

# பதிப்புரை

நமது நகர் நகரச் சிவாலயத்தில் பேரருட் பிழம்பாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேசுவரப் பெருமானுக்கு ஆண்டு தோறும் நடைபெற்று வரும் மார்கழித் திருவாதிரைத் திருநாளில் படிக்கப் பெறும் "திருவூடல் வர்ணனை" யை, எங்கள் அரும் பெறல் தந்தையார் திருவாளர் சு. மு. ராம. முரு. முருகப்ப செட்டியாரவர்களின் ஞாபகார்த்தமாக அச்சிட்டு வெளியிடுகிறோம். இதனை நூல் வடிவில் கொண்டு வருவதற்கேற்ற முறையில் செப்பஞ்செய்து முன்னுரையும் வழங்கிய சைவசித்தாந்தச் செல்வரும் ஞானசிரியருமாகிய சிவஸ்ரீ தத்புருஷதேசிகரவர்களுக்கு எங்கள் நன்றியறிதலுடன் கூடிய வணக்கம் உரியதாகுக.

மார்கழிப் பாராயணத்திற்குரிய திருவாசகத் திருப்பள்ளியெழுச்சி – திருவெம்பாவையும், திவ்வியப் பிரபந்தத் திருப்பள்ளியெழுச்சி - திருப்பாவையும், பாராயணத்தின் தொடக்கத்தில் ஓதும் பஞ்சபுராணத் திருப்பாடல்களும், முன்னும் பின்னும் சொல்லுகின்ற நாமாவளிகளும் மாணவர்களின் நல்லொழுக்க வளர்ச்சி கருதிய நன்னடக்கையும் இவ்வூர் அன்பர்கள் ஓதி வருகின்ற முறைப்படி இதில் சேர்க்கப் பெற்றுள்ளன.

மெய்யன்பர்களுக்கு இந்த நூல் எல்லா இன்பங்களையும் வழங்குவதாக.

அன்புள்ள,

| | |
|---|---|
| கோநகர் | சுப. முருகப்ப செட்டியார் |
| சௌமிய | முரு. இராமநாதன் செட்டியார் |
| மார்கழி க | முரு. இராதாகிருஷ்ணன் செட்டியார் |

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# முன்னுரை

## தேவகோட்டை "பாலகவி" சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்

அகில உலகங்களிலும் வாழுகின்ற உயிர்த் தொகுதிகளனைத்தும், உலக போகங்களை நுகர்ந்து இன்புறுதற்குக் காரணமாகப் பரங்கருணைத் தடங்கடலாகிய சிவ பெருமான் உமா தேவியாரோடு போக மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார். அநாதியே மண மக்களாக விளங்கிக்கொண்டிருக்கிற அவர்களது திரு வூடல் வர்ணனை, நமது புராண இதிகாசங்களில் இடம் பெற்றுள்ளன.

எல்லாப் பொருள்களையும் கடந்து பேரொளிப் பிழம்பாக விளங்கும் சிவம், எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்கும் தடத்தத் திருமேனி கொண்டு, உயிர் களின் உய்தி கருதிப் பல திருவிளையாடல்களைச் செய்து வருவது, அருள் நூல்களிற் காணப் பெறுவதும் அருளாளர்களின் அனுபவத்திற்கு வருவதுமாகும். அத்தகைய திருவிளையாடல்களுள் "திருவூட" லும் ஒன்று.

சிவபெருமானது உருவத் திருமேனிகள் அறுபத்து நான்கனுள் "பிரார்த்தனை மூர்த்தம்" என்ற அறுபத்தி ரண்டாவது திருமேனி, ஊடல் கொண்ட உமா தேவியைச், சிவபெருமான் ஊடல் நீங்க வேண்டிக்

கொள்ளுதற்குக் கொண்டதாகும். இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவங்களுள் "கௌரீ தாண்டவம்" என்பதும் ஒன்று. இதனை அவர் ஊடல் நீக்கம் வேண்டி ஆடியருளினரென்று, அருள் நூல்கள் கூறுகின்றன.

பரமானந்த தாண்டவேசுவரராகிய நடராசப் பெருமானுக்குரிய திருவாதிரைத் திருநாளில் கோனு பட்டு என வழங்கி வரும் கோநகரில் நகரத்தார்களுக் குச் சொந்தமான சிவாலயத்தில், திருவூடல் திருவிழா பல ஆண்டுகளாக நிகழ்ந்து வருகிறது.

இதனை நிகழ்த்தி வருபவர்கள், இந்நகரில் இலுப் பைக்குடிக் கோவில் உரிமையாளர்களில் ஒருவராகிய சு. மு. குடும்பத்தினர்களாவார்கள். இந்த நன் மரபில் வந்த செல்வர்களான சுப. முருகப்ப செட்டியார், முரு. இராமநாதன் செட்டியார், முரு. இராதாகிருஷ் ணன் செட்டியார் ஆகிய மூவரும் பற்பல நற்பணி களைச் செய்து வாழ்ந்திருந்த அவர்களது தந்தையார் திருவாளர் சு. மு. ராம. முரு. முருகப்ப செட்டியாரவர் களின் ஞாபகார்த்தமாகப் "பிரணய வர்ணனம்" என்னும் இத்திருவூடல் வர்ணனையை அச்சியற்றி வெளியிடுகின்றார்கள்.

போக மூர்த்தியாகிய ஸ்ரீ சிவகாமியம்பா சமேத ஆனந்த நடராசப் பெருமான், இவர்களுக்கு எல்லா நலங்களையும் வழங்கியருளுவாராக.

நலமே தழைக.

---

உ
சிவமயம்

# சு. மு. ராம. முரு.
# முருகப்ப செட்டியார்



தோற்றம்: 12-2-1906 மறைவு: 8-7-1961

உ

சிவமயம்

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவரர் துணை

# திருவூடல்

திருச்சிற்றம்பலம்

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்
சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற் பாதமும் காணப்
பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே.

செய்ஞ்ஞின்ற நீலம் மலர்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
மைஞ்ஞின்ற ஒண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து
நிற்க
நெஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே.

திருச்சிற்றம்பலம்

பார்வதி தேவியார் பரமசிவனை நோக்கி, சுவாமி! தேவரீர் சத்தும், சித்தும், ஆனந்தமுமாகிய மூன்றும் கூடிய திருமேனியை உடையவர். ஆதி, நடு, அந்தம் இல்லாதவர். எங்கும் நிறைந்தவராய், எல்லாம் அறிப வராய், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவராய்ப், பேரறிவும், பேராற்றலும், பெருங்கருணையும் உடைய வராய்த், தனக்கு மேலொரு தலைவர் இல்லாதவராக விளங்குகிறீர். தேவரீரைத் துணைவராகப் பெற்று உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய மூவரும், இந்திரன் முதலிய தேவரும், ஏனைய முனிவர் மனிதர் முதலானோரும் போற்றிப் பணிய இருக்கும் எனக்கு, "யானே இணை" என்று எண்ணி, இதுவரை மிகுந்த பெருமிதத்தோடு வாழ்ந்து வந்தேன். ஆனால், இப்போது எனக்கு எதிரியாக, ஒருத்தியைத் தலையின் மேல் வைத்திருக்கீறீர். உருத்திரகணிகையர் வீதியில் உலாவுவதும், அவர்களது ஆடல் பாடல் முதலிய வற்றிலே மயங்கி நிற்பதும், அவர்கள் பூசுவிக்கின்ற சந்தனப் பூச்சு அணிவிக்கின்ற இரத்தினாபரணம், சூட்டுகின்ற மாலை முதலியவற்றை விரும்பி ஏற்பதும், தேவரீரது தொழில்களாகிவிட்டன. மதுரையில், வீதி கள் தோறும் அலைந்து, மங்கையர்களுக்கு வளையல் வியாபாரம் செய்தீர். திருப்பூவணத்தில், "பொன்னனையாள்" என்ற உருத்திரகணிகையின் வீடு தேடிச் சென்று, அவள் விருப்பத்தை நிறைவேற்றினீர். தாருகாவனத்து முனிவர்களின் மனைவிமார்கள் அனை வரும், தேவரீரிடத்தில் மனத்தைப் பறி கொடுத்து மயங்கும்படி செய்தீர். இங்ஙனம், எனக்கு விருப்ப மில்லாத செயல்களைத் தேவரீர், இடைவிடாமற் செய்து வருவது நியாயமாகாது. இனி, நானிருக்கும் திருக்கோயில் வாசலுக்கு நீர் வரவேண்டாம் என்று, கோபத்துடன் கூறித், திருக்கோயிலுட் சென்று, கதவைத் தாழிட்டுக் கொண்டார்.

பரமேசுவரர் தேவியின் ஊடல் நீங்க அவளைச் சமாதானஞ் செய்வதற்கான இனிய வார்த்தைகளைப் பேசிக், கதவைத் திறக்கும்படி மன்றாடி வேண்டினார். அவரது வார்த்தைகள், அம்மையாரின் கோபத்தை மிகுதிப்படுத்திவிட்டன. சிவபெருமான் இந்த ஊடலைத் தீர்க்க இனி நம்மாலாகாது. ஆலால் சுந்தரனே இதனைத் தீர்க்க வல்லவன் என்று துணிந்து, ஆற்று மணலில் இலிங்கம் தாபித்து, ஆவின் பாலைச் சொரிந்தாட்டிப் பேறுபெற்ற சண்டேசுரரையும் தேவியின் திருமுலைப்பாலுண்டு சிவஞானம் பெற்ற ஆளுடைய பிள்ளையையும் – ஐயாற்றில் கயிலை கண்ட ஆளுடைய அரசையும், பாவை பாடிய வாயால் கோவை பாடிய ஆளுடைய அடிகளையும் அழைத்துப் பண்மயத்த மொழிப் பரவைக்கும் சங்கிலிக்கும் பற்று கிய ஆளுடைய நம்பியைக் கூட்டி வருவீர்களாக என்று கட்டளையிட்டார். அவர்கள் சுந்தரமூர்த்தி நாயனாரிடம் சென்று, சிவபெருமானது திருவுள்ளக் குறிப்பைத் தெரிவித்தார்கள். சுந்தரர் சிவபெருமானது ஆணையின் வண்ணம் அவரிருக்குமிடத்தை நாடி வந்தார்.

நம்பியா ரூரன் வந்தான் நாவலூர்ச் சைவன் வந்தான்
உம்பரால் அறிய வொண்ணு உண்மைகள்
உரைத்தோன் வந்தான்
செம்பொனூர் மதில்கள் சூழ்ந்து திகழ்செல்வத்
திருவாரூரில்
தம்பிரான் தோழன் வந்தான் என்றன தாரை சின்னம்

சுவாமி சந்நிதியை அடைந்த சுந்தரமூர்த்திநாயனூர், கீழே விழுந்து வணங்கி எழுந்து

திருச்சிற்றம்பலம்

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமேமனம்
பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனினிப் பிறவாத தன்மைவந்
தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்தும் சீர்க்கறை யூரிற்பாண்டிக்
கொடுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினும் சொல்லுநா
நமச்சிவாயவே

திருச்சிற்றம்பலம்

என்று துதித்து

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னுடுமா னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் நடேசப்பெருமானை மீண்டும் வணங்கிச், சுவாமி! அடியேனை அழைத்தது எதன்பொருட்டு என்பதை அருளிச் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கச், சுவாமி அவருக்குத் திருப்பரிவட்டம் திருமாலை ஆதியன சூட்டிப், பார்வதி தேவியார் கொண்ட ஊடலைத் தீர்த்து அவர் இன்புறும்படி செய்வாயாக என்று திருவாய் மலர்ந்தருளினர்.

சுந்தரத் தோழா கேண்மோ சொல்வடி விமயப் பாவை
சிந்தையின் மகிழ்ச்சி கொண்டு சேர்ந்துற வீதி
போந்தோம்
இந்தநல் வேளை என்பால் ஏதேதோ குறைகள் கூறி
மந்திரக் கோயில் புக்கு வாயிலைத் தாழிட் டாளே.

சுந்தரனே! ஆன்ம கோடிகளுக்கு யாம் பற்பல வழிகளில் நின்று அருள் புரிவோமென்பதை, நீ அறிவாய். அங்ஙனம் புரிந்த அருள் விளையாடல்களிற் சில, அவளுக்குப் பிடிக்கவில்லையாம். கங்கா தேவியைத் தலையில் வைத்திருப்பதும், உருத்திர கணிகையரின் நடனம் முதலியவற்றை விரும்புவதும், தாருகா வனத்து முனிவர்களது மனைவியர்கள் மனமயக்கம் கொண்டதுமான நிகழ்ச்சிகள், அவளுக்கு என்பால் வெறுப்பை உண்டாக்கி விட்டன போலும். அவள் கொண்ட ஊடலைத் தீர்த்து, அவளை நம்மிடம் அழைத்து வருவது உனது பொறுப்பு என்று சுவாமி சொல்லச் சுந்தரமூர்த்திகள்

திருச்சிற்றம்பலம்

வங்க மலிகடல் நாகைக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானொர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாயிக் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற்பொல் லாதுகண் டாயெங்கள் நாயகனே

திருச்சிற்றம்பலம்

என்றுகூறி, அம்மன் சந்நிதானத்திற்குச் சென்று, பாங்கியர்களைப் பார்த்துப், பாதிமதி அணிந்த பரம சிவனின் தூதனாக அடியேன் ஆலால சுந்தரன் வந்திருக்கிறேனென்று, தேவியாரிடம் தெரிவியுங்கள்

என்ருர். அதற்குள் அம்மையார், அவர் வருகையை அறிந்து, கோயில் வாசலுக்கு வந்து, அவரை வரவேற்க, அப்போது சுந்தரமூர்த்தி சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றின் ஒளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோன் அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி!

திருச்சிற்றம்பலம்

என்று துதித்து, அவரது திருவுள்ளம் மகிழுதற்காகச் சிவபெருமானைக் குறை கூறுவார்போல,

திருச்சிற்றம்பலம்

ஒருத்திதன் தலைச்சென் ருளைக் கரந்திட்டான் உலகம் ஏத்த
ஒருத்திக்கு நல்லன் ஆகி மறுப்படுத் தொழித்து மீண்டே
ஒருத்தியைப் பாகம் வைத்தான் உணர்விஞல் ஐயம் உன்னி
ஒருத்திக்கும் நல்லன் அல்லன் ஒற்றியூர் உடைய கோவே!

திருச்சிற்றம்பலம்

என்று பாடினர்.

கேட்ட அம்மையார், சுந்தரரை நோக்கிப் பரமேசுரராகிய சிவபெருமான், முன்ருட்களில் எப்பொழுதும் என்னைவிட்டு எந்தக் காரியமும் செய்வ

தில்லை. இந்திரன் முதலிய தேவர்களுக்கும், அகத்தியர், கௌதமர் முதலிய முனிவர்களுக்கும், இராமன், அருச்சுனன் முதலான அரசர்களுக்கும் என்னையல்லாமல் அவர் அனுக்ரகம் செய்யவில்லை. ஞானசம்பந்தன், நாவுக்கரசன், மணிவாசகன், முதலிய உம்முடன் உள்ள மூவருக்கும் உமக்கும் என்னைவிட்டுத் தனியாக வந்து காட்சி கொடுத்து, அனுக்ரகம் செய்யவில்லை என்பதும் உமக்குத் தெரிந்ததுதானே! இப்போது அவர் என்னைக்காட்டாமல் லோகானுக்ரகம்செய்ய முற்பட்டுவிட்டார். உருத்திரகணிகையர் மோக வலையில் வீழ்ந்து மயங்குகிருர், மானிட மங்கையரிடம் மையல் கொண்டு வளையல் வியாபாரமும் செய்யத் தொடங்கிவிட்டார். தாருகாவனத்து முனிவர்களது மனைவியரிடம் இவர் நடந்து கொண்ட முறை நீரறிந்தது தானே! போதாக் குறைக்கு, இடை விடாது கூத்தாடிக் கொண்டே இருக்கிருர். இனி இவருடன் வாழ்வதை விட எனது சகோதரராகிய மகாவிஷ்ணுவின் வீட்டிற்குச் சென்று வசிப்பதுதான் நல்லதென்ற முடிவுக்கு வந்துவிட்டேன். அவர், அவரை விரும்புகிற மற்ற மாதர்களோடு இன்பமாய்க் காலம் கழிக்கட்டும். அதில்எனக்கு ஏதும் தடையில்லை. நீரும் அவரோடு சேர்ந்து அவருக்கு உதவி செய்யலாம், என்று கோபத்துடன் சொல்லி அவரை அனுப்பிவிட்டு, மீண்டும் கோயிற் கதவுகளைத் தாழிட்டுக் கொண்டார்.

சுந்தரமூர்த்திகள், சுவாமி சந்நிதியையடைந்து, பெருமானே! தேவரீர் முன்பு இருந்ததுபோலத் தேவியாரிடம் விருப்பங் கொண்டு நடக்கவில்லையென்றும், சமாதானம் செய்வதற்காக இனி நான் அங்கே வரக் கூடாதென்றும் கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்!! என்று கூறினர்.

சுவாமி, சுந்தரமூர்த்தியை நோக்கி, சுந்தரனே! நீ மறுபடியும் பார்வதி தேவியிடம் போய் அடியார்களுக்கு அருள் செய்வதற்காக நம்முடன் கூடித் திருவீதியில் எழுந்தருளி வந்த போது, பாங்கியர்களின் பொய்யான வார்த்தைகளைக் கேட்டுக் கோபம் அடைந்துவிட்டாள் என்பதையும், பெண்களுக்குக் கணவனுடன் தனித்திருக்கும் வேளையில் உண்டாகும் கோபமே மகிழ்ச்சிக்குரியது என்பதையும், எல்லோரும் அறிய வெளியிடத்தில் கொள்ளும் கோபம் தூற்றுதற்குரியது என்பதையும்,

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்... என்னுந் திருக்குறளில் திருவள்ளுவர், பெண்கள் கொள்ளும் ஊடல், மீண்டும் கூடலுக்குக் காரணமாயிருக்க வேண்டுமேயன்றி ஊடலாகவே நின்றுவிடக் கூடாது என்று வற்புறுத்தியிருக்கிறார் என்பதையும், இயற்கையில் குளிர்ந்த தன்மை உடையவளுக்கு இப்படிக் கோபம் வந்தது தகாது என்பதையும், இமயமால் வரையில் மணந்து கொண்ட நாள் தொடங்கி இதுவரை, ஒரு கணப் பொழுதுகூட அவளை நான் மறந்ததில்லை என்பதையும், எவனும் செங்கழுநீர் மலரை விட்டு முள்முருக்கம் பூவை விரும்பமாட்டான் என்பதையும், விளங்க எடுத்துச் சொல்லி, அவளது கோபத்தைத் தணித்து வருவாயாக என்று திருவாய் மலர்ந்தருள, சுந்தரர் தேவி சந்நிதியையடைந்து

திருச்சிற்றம்பலம்

*மன்றின்மணி விளக்கெனலா மருவுமிள நகைபோற்றி*
*யொன்றியமங் கலநாணி ஞெளிபோற்றி யுலகும்பர்*
*சென்றுதொழ வருள்சுரக்குஞ் சிவகாம சுந்தரித*
*னின்றதிரு நிலைபோற்றி நிலவுதிரு வடிபோற்றி*

திருச்சிற்றம்பலம்

என்று துதித்து நின்றார்.

அம்மையார் சுந்தரரை நோக்கி, திரும்பவும் வந்ததற்குரிய செய்தி யாது? என்று கேட்கச் சுந்தரர் சுவாமியினது திருவுள்ளக் கருத்திற் கிசைந்து, அவர் பால் எழுந்தருள வேண்டுமென்று பலவாருக வேண்டி விண்ணப்பம் செய்தார். தேவியார் சுந்தரரைப் பார்த்து, இதற்காக நீர் மீண்டும் இங்கு வந்தது உமக்கு வெட்கமாக இல்லையா? நடு யாமத்தில் உமது மனைவி யின் வீட்டிற்கு, இரண்டு முறை நடந்து தூது சென்று அவள் உம்மிடம் கொண்ட ஊடலைத் தீர்த்து, அவளோடு உம்மைச் சேர்த்து வைத்த இவருக்காக, நீர் இங்குமங்குமாக அலைய வேண்டியதுதான்! உமக் காக அவர் வெட்கத்தை விட்டு வீடுகள் தோறும் சென்று பிச்சை வாங்கி ஊட்டினரல்லவா? அவருக்கு ஆலகால விடத்தை எடுத்துக் கொடுத்துப் பல சிறப் புக்களை நீர் பெற்றீர். அதற்காக அவருக்குப் பதிலுப காரம் செய்ய வேண்டியதுதான். ஆனல் உமது தந்திரம் என்னிடம் பலிக்காது, என்று கோபத்துடன் சொல்லி, எனது பிராண நாயகர் என்ற காரணத்தால் தான் அவருக்கு வாசனைத் திரவியங்களும், பனி நீர் போன்ற தீர்த்தங்களும், பட்டாடையும் களப கஸ்தூரி களும், ரத்தினுபரணங்களும், நறுமணமுள்ள மலர் மாலைகளும், அறுசுவை உண்டிகளும் உலகத்தாரால் சமர்ப்பிக்கப் படுகின்றன. இவரோ அவற்றையெல் லாம் பிறருக்குக் கொடுத்துவிட்டுச் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிக்கொண்டும், மானையும், தீயையையும், எலும்பு மாலைகளையும், பாம்புகளையும், தரித்துக் கொண்டும், ஊமத்தை எருக்கு முதலிய மணமற்ற மலர்களைச் சூடிக்கொண்டும், வறியவன்போல் பிச்சை வாங்கிக் கொண்டும் திரிகிருர்.

இன்னும் அவரது கதையைக் கேட்பீராக! திருநெல்வேலியில், நாடோறும் அரசன் ஒருவனுக்குக் குடத்தில் பால் கொண்டு சென்ற இடையன் ஒருவனது காலை இடறி, அவன் விழும்பொழுது உடைந்த, பானையிலிருந்து சிந்திய பாலில் குளித்து மகிழ்ந்தார். அந்த இடையனுலும், அரசனுலும் கோடரி கொண்டு பிளக்கப் பெற்ற சிரசையுடையவரானுர். மதுரையில் வந்திக்குக் கூலியாளாக வந்து, மண் சுமந்து பாண்டியன் பிரம்பினுல் அடிபட்டார். காஞ்சியில், சாக்கிய நாயனுரது கல்லெறிக்குட்பட்டார். அர்ச்சுனனது வில்லால் அடிபட்ட காயம், அவர் தலையில் இன்னும் இருக்கிறது. அகிலாண்ட கோடிகளிலுமுள்ள எண்ணற்ற எனது மக்களைக் காப்பாற்றும்படி, ஒரு நாழி நெல் மட்டும் என்னிடம் தந்தார். அந்த நாழி நெல்லைக் கொண்டே எல்லா உயிர்த்தொகைகளும் வாழும்படி நான் வைத்திருக்கிறேன். அவர் என்னிடம் உண்மையான விருப்பம் உடையவரானுல் எனது மக்களின் நல்வாழ்வுக்காக எல்லாக் கிராமம், பூமி பொருள்களையும் சர்வசுதந்தரமாக நான் அனுபவிக்கும்படி பட்டயம் எழுதித்தரட்டும். அங்ஙனம் செய்வாரானுல் நான் மகிழ்ச்சி அடைவேன், என்று கூறினுர்.

சுந்தரமூர்த்திகள் சுவாமி சன்னிதியை அடைந்து அம்மையாரின் விருப்பத்தை அறிவிக்கச் சுவாமி புன்சிரிப்புடையவராகி அவ்வாறே எல்லாப் பொருள்களையும் அம்மையாருக்கு உரிமையாக்கிய பட்டயம் ஒன்றை எழுதும்படி சுந்தரமூர்த்திக்கு ஆணையிட்டு வாசிக்க வைத்ததுடன், சாமவேதிகளை அழைத்துப் பரிவட்டம் கட்டித் திருநீறு பிரசாதம் வழங்கிச் சாம கானம் செய்யும்படியும் ஆணையிட்டருளினுர்.

திருச்சிற்றம்பலம்

சூடினார் கங்கை யாளைச் சூடிய துழனி கேட்டு
ஊடினாள் நங்கை யாளும் ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார் சாம வேதம் பாடிய பாணி யாலே
ஆடினார் கெடில வேலி அதிகைவீ ரட்ட னாரே.

திருச்சிற்றம்பலம்

அம்மையார் அது கேட்டு மகிழ்ந்து சுவாமி சந்நிதானத்தை அடைந்து அவரது இடப்பாகத்தில் சேர்ந்து அடியார்கட்கு அருள் புரிந்தார். சுவாமி அம்மையாரிடம் பேரன்பு கொண்டவராய் இன்புற்று இருவரும் திருக்கோயிலை அடைந்து எழுந்தருளியிருந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க! மன்னன்
கோல்முறை அரசுசெய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க; நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவநீதி விளங்குக! உலகம் எல்லாம்.

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# பட்டயம்

சுபஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் 1892 கலியுக ஆண்டு 5071 திருவள்ளுவர் ஆண்டு இரண்டாயிரம் பசலி 1379 ஆங்கிலம் 1969க்கு நிகரான சௌமிய ஆண்டு மார்கழித் திங்கள் 9ஆந் தேதி புதன்கிழமை பூர்வபக்ஷம் பௌர்ணமி திருவாதிரை நாளில் சிற்பர வியோமமாகிய திருச்சிற்றம்பலப் பரவெளிவாசியும், மஹாருத்ர தாண்டவேசுவர மூர்த்தியுமாகிய ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேசுவரர் பால், அம்பிகை ஊடல் கொண்டிருக்க ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வூடலைத் தீர்த்து ஸ்ரீ மீனுக்ஷி அம்பாளுக்கு எழுதிக் கொடுத்த பட்டயம். மங்கலப் பாண்டிவள நாட்டில் ஸ்ரீ மீனுக்ஷி அம்பா சமேத சுந்தரேசுவரர் என்னுந் திரு நாமங் கொண்டு யாம் வீற்றிருக்கின்ற சிறு மதுரை சிவப்பட்டிக்குக் கிழக்கு, ஸ்ரீ வேணுவனேசுவரி அம்பா சமேத சத்யகிரீசுவரர் என்னுந் திருநாமங் கொண்டு யாம் வீற்றிருக்கின்ற திருமெய்யத்திற்குத் தெற்கு ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பா சமேத கைலாச நாதர் என்னுந் திருநாமங் கொண்டு யாம் வீற்றிருக்கின்ற பெரிய கோவிலுக்கு மேற்கு ஸ்ரீ அழகுடைய நாயகி அம்பா சமேத தேனுற்றுநாதர் என்னுந் திருப் பெயர் கொண்டு யாம் வீற்றிருக்கின்ற மயூரகிரி என்னும் குன்றக்குடிக்கு வடக்கு இந்நான்கெல்லைக் குட்பட்ட கோனுபட்டு என்று வழங்கும் கோநகரில் தனவணிக மணிமகுட நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் நடத்திவருகிற ஆறுகாலப்பூசை நிவேதனமும், நித்திய, வார, பக்ஷ, மாதஉத்ஸவம் முதலான நைமித்திக பூசைகளும் நிகழுவதற்கு உள்ள முலதனம்

ஆபரண வாகனுதிகளையும் இன்னும் இவைபோல் மற்றும் பற்பல இடங்களில் மெய்யடியார்கள் செய்து வரும் திருப்பணிக்குரிய எல்லாப் பொருள்களையும், சந்திராதித்தர் உள்ள காலம் வரை சாசுவதமாய் ஸ்ரீ மீனுக்ஷி அம்மையாரே ஆண்டு அனுபவித்துக் கொள்ளுகிறதென்று பரமபதியாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியபடி அடியேன் ஆலாலசுந்தரன் இந்தப் பட்டயம் எழுதிக் கைச்சாத்திட்டுக் கொடுத்துள்ளேன்.

திருச்சிற்றம்பலம்

வாழ்த்து

*சீராருங் கோநகரில் திகழ்தருமீ னுட்சியிரு*
*திருத்தாள் வாழ்க*

*நாராருந் திருவுளத்து நாயகனுர் சுந்தரரின்*
*நற்ருள் வாழ்க*

*பாராரும் பெரும்புகழார் பலபணிகள் புரிந்துயரும்*
*பாங்கி னுள்ளார்*

*ஏராருந் தனவணிகர் இருநிலத்தில் வளங்களெலாம்*
*எய்தி வாழ்க!*

திருச்சிற்றம்பலம்

ஒப்பம்: ஆலாலசுந்தரன்

சாட்சிகள் :–

1. சண்டேசன்
2. ஞானசம்பந்தன்
3. நாவுக்கரசன்
4. மணிவாசகன்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருப்பள்ளி எழுச்சி

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்
## திருப்பெருந்துறையில் அருளியது
## (திரோதான சுத்தி—மறைப்பு நீக்கம்)

போற்றி என் வாழ்முத லாகிய பொருளே!
புலர்ந்தது; பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
ஏற்றுயர் கொடியுடையாய் எனை யுடையாய்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (1)

அருணன் இந்திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந்
திரள்நிரை யறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகடலே பள்ளி எழுந்தருளாயே! (2)

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளி யொளியுதயத்து
ஒருப்படுகின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
யாவரும் அறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (3)

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (4)

பூதங்கள் தோறுநின் ருயெனின் அல்லாற்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுத லல்லால்
கேட்டறியோம் உனைக் கண்டறி வாரை
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னு
சிந்தனைக்கும் அறியாய் எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (5)

பப்பற வீட்டிருந் துணருநின் அடியார்
பந்தனை வந்தறுத்தார் அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின்ருர் அணங்கின் மணவாளா!
செப்புறு கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (6)

அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இது அவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்

மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்ன
எதுவெமைப் பணிகொளும் ஆறதுகேட்போம்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (7)

முந்திய முதனடு விறுதியு மானாய்
மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியு நீயு நின்னடியார்
பழங்குடில் தொறும் எழுந்தருளிய பரனே!
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங்காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே! (8)

விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா
விழுப்பொருளே உன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதருதேனே
கடலமுதே கரும்பே விரும்படியார்
எண்ணகத் தாய் உலகுக்குயி ரானாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (9)

புவனியிற் போய்ப்பிறவாமையில் நாள் நாம்
போக்குகின்றோம் அவமே இந்தப்பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறைவாய் திருமாலாம்
அவன் விருப்பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே! (10)

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவெம்பாவை

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

திருவண்ணுமலையில் அருளியது

(சத்தியை வியந்தது)

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக்கேட்டேயும் வாள் தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள்வாழ்த்திய வாழ்த்தொலி
போய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டுஇங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தாள் என்னே என்னே
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய். (1)

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல் நாம்
பேசும்போ தெப்போ திப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீ சீ இவையுஞ் சிலவோ விளையாடி
ஏசுமிடம் ஈதோ விணணோர்கள் ஏத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனுர்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய் (2)

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்தெதி
ரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்

புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற்
பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோ மறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்
(3)

ஒள்நித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றே
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொடுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்கொரு மருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்.
(4)

மாலறியா நான்முகனுங் காணா மலையினை நாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோல மிடினு முணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய். (5)

மானே நீ நென்னலை நாளை வந்துங்களை
நானே யெழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசை பகராய் இன்னம் புலர்ந்தின்றே
வானே நிலனே பிறவே அறிவறியான்

தானே வந்தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே உருகாய் உனக்கே உறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய் (6)

அன்னே இவையுஞ்சிலவோ பலவமரர்
உன்னற் கரியா னொருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னா என் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை என்னரையன் இன்னமுதென்றெல்லோமுஞ்
சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளாகிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய். (7)

கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும் வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழை பங்காளனையே பாடேலோர் எம்பாவாய். (8)

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்னவகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்னகுறையும் இலோமேலோர் எம்பாவாய். (9)

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
  போதார் புனைமுடியும் எல்லாப் பொருண் முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
  வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்
ஓதஉலவா ஒருதோழன் தொண்டருளன்
  கோதில் குலத்தரன்தன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆர் அயலார்
  ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய். (10)

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
  கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயாவழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
  செய்யா வெண்ணீருடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
  ஐயா நீயாட்கொண்டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்
                                        தொழிந்தோம்
  எய்யாமற் காப்பா யெமையேலோர் எம்பாவாய்.
                                        (11)

ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த்தாடுந்
  தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங்
கூத்தன் இவ்வானுங் குவலயமும் எல்லோமுங்
  காத்தும்படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும்பேசி வளைசிலம்ப வார்கலைகள்
  ஆர்ப்பவரஞ்செய்ய அணிகுழல்மேல்
                                        வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
  ஏத்தியிருஞ்சுனை நீ ராடேலோர் எம்பாவாய். (12)

பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப்பைம் போதால்
  அங்கங் குருகினத்தாற் பின்னு மரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினல்
  எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த

பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்து நம்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப்பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்
(13)

காதார் குழையாடப் பைம்பூண் கலனுடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம்பலம் பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை தன்
பாதத்திறம்பாடி யாடேலோர் எம்பாவாய். (14)

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே
நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங்களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத்தான்
பணியாள்
பேரரையற்கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்த
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி [கர்தாள்
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்
(15)

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடை
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற் [யின்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்

என்னச்சிலை குலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்குமுன் சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்.
(16)

செங்க ணவன்பால்திசை முகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.
(17)

அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போற்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந் தாடேலோர்
[எம்பாவாய். (18)

உங்கையிற் பிள்ளை யுனக்கே அடைக்கலமென்று
அங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க

எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப்பரிசே எமக்கு எங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்.
(19)

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல்லா வுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றி யெல்லா வுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி யெல்லா வுயிர்க்கும் ஈறும் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்
போற்றியாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய் [கள்
(20)

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ

ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பள்ளியெழுச்சி

(ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களை மக்கள் விடியற் காலையில் பாடுதல் இன்றியமையாதது. திருப்பாவைப் பாடல்களைப் பாடுதற்கு முன்னதாகவே இவற்றைப் பாடுதல் வேண்டும்.)

•கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனையிரு ளகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம்
வானவ ரரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 1

கொழுங்கொடி முல்லையின் கொழுமல ரணவிக்
கூர்ந்தது குணதிசை மாருதம் இதுவோ
எழுந்தன மலரணைப் பள்ளிகொள் அன்னம்
ஈன்பணி நனைந்ததம் இருஞ்சிற குதறி
விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்
வெள்ளெயி றுறஅதன் விடத்தினுக் கனுங்கி
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த
அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே 2

சுடரொளி பரந்தன சூழ்திசை யெல்லாம்
துன்னிய தாரகை மின்னொளி சுருங்கிப்
படரொளி பசுத்தனன் பனிமதி இவனோ
பாயிருள் அகன்றது பைம்பொழிற் கமுகின்

மடலிடைக் கீறிவண் பாளைகள் நாற
　　வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ
அடலொளி திகழ்தரு திகிரியந் தடக்கை
　　அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 3

மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்கள்
　　வேய்ங்குழ லோசையும் விடைமணிக் குரலும்
ஈட்டிய இசைதிசை பரந்தன வயலுள்
　　இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை
வாட்டிய வரிசிலை வானவ ரேறே!
　　மாமுனி வேள்வியைக் காத்தவ பிரதம்
ஆட்டிய அடுதிறல் அயோத்தியெம் மரசே!
　　அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 4

புலம்பின புட்களும் பூம்பொழில் களின்வாய்
　　போயிற்றுக் கங்குல் புகுந்தது புலரி
கலந்தது குணதிசைக் கனைகட லரவம்
　　களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கலந் தொடையல்கொண் டடியிணை பணிவான்
　　அமரர்கள் புகுந்தனர் ஆதலின் அம்மா
இலங்கையர் கோன்வழி பாடுசெய் கோயில்
　　எம்பெரு மான்!பள்ளி யெழுந்தரு ளாயே. 5

இரவியர் மணிநெடுந் தேரொடும் இவரோ
　　இறையவர் பதினொரு விடையரும் இவரோ
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ
　　மருதரும் வசுக்களும் வந்துவந் தீண்டிப்
புரவியோ டாடலும் பாடலும் தேரும்
　　குமரதண் டம்புகுந் தீண்டிய வெள்ளம்
அருவரை யனைய நின் கோயில்முன் இவரோ
　　அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 6

அந்தரத் தமரர்கள் கூட்டங்கள் இவையோ
அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ
இந்திர னூனையும் தானும்வந் திவனே
எம்பெரு மான்! உன் கோயிலின் வாசல்
சுந்தரர் நெருக்கவிச் சாதரர் நூக்க
இயக்கரும் மயங்கினர் திருவடி தொழுவான்
அந்தரம் பாரிடம் இல்லைமற் றிதுவோ
அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 7

வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க
மாநிதி கபிலையொண் கண்ணாடி முதலா
எம்பெரு மான்!படி மைக்கலங் காண்டற்கு
ஏற்பன வாயின கொண்டுநன் முனிவர்
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ
தோன்றினன் இரவியும் துலங்கொளி பரப்பி
அம்பர தலத்தினின் றகல்கின்ற திருள்போய்
அரங்கத்தம் மா!பள்ளி யெழுந்தரு ளாயே. 8

•ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழவமோ டிசைதிசை கெழுமி
கீதங்கள் பாடினர் கின்னரர் கருடர்கள்
கந்தரு வருமவர் கங்குலு ளெல்லாம்
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயங்கினர் திருவடி தொழுவான்
ஆதலில் அவர்க்குநா ளோலக்கம் அருள
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 9

•கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன இவையோ
கதிரவன் கனைகடல் முளைத்தனன் இவனோ
துடியிடை யார்சுரி குழல்பிழிந் துதறித்
துகிலுடுத் தேறினர் சூழ்புன லரங்கா!
தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள்தொண்ட ரடிப்பொடி யென்னும்
அடியனை அளியனென் றருளிஉன் னடியார்க்
காட்படுத் தாய்!பள்ளி யெழுந்தரு ளாயே. 10

ஸ்ரீ

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

(ஸ்ரீ பெரியாழ்வார் பெற்ற பெண்கொடியாகிய ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை கீழே தரப் பெற்றுள்ளது. பக்தர்கள் நாள்தோறும் விடியற்காலை யில் திருப்பாவை முப்பது பாடல்களையும் பாடுதல் நல்லது. அவ்வாறு பாடுபவர்கள், திருமாலின் திரு வருளைப் பெற்று இன்புறுவர் என்று அம்மையாரே கூறியுள்ளார். ஆண்டு முழுவதும் பாட முடியாதவர் கள் மார்கழி மாதத்திலேனும் நாள்தோறும் விடியற் காலையில் பாடுதல் வேண்டும். அதுவும் இயலாதவர் கள், அம்மாதத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாடல் வீதமாகவேனும் பாடுதல் பயன் தரும். திருப் பாவைப் பாடல்களின் இனிமையும் எளிமையும், அழகும் ஆழமும் நுகர்ந்து இன்புறத்தக்கன.)

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் [போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய். 1

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி

மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யாதனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய். 2

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினல்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய். 3

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 4

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை,
தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனை,
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினல் பாடி மனத்தினல் சிந்திக்கப்
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய். 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். 6

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து [பெண்ணே!
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினல்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?
தேசமுடையாய்! திறவேலோ ரெம்பாவாய். 7

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றுரைப் போகாமல் காத்துன்னைக்
கூவுவான் வந்துநின்றேம் கோது கலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவாவென் ருராய்ந் தருளேலோ ரெம்பாவாய். 8

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை எழுப்பீரோ? உன்மகள்தான்

ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். 9

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய்முடி நாரா யணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொரு
கூற்றத்தின் வாழ்வீழ்ந்த கும்ப கருணனும் [நாள்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய். 10

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றர வல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி! நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய். 11

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேருக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும் நீவாய்திறவாய்
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்!
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்
12

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி எழுந்து வியாழ முறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். 13

உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பின
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர் [காண்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாவுடையாய்
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய். 14

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?
சில்லென் றழையேன்மின்! நங்கைமீர்! போதருகின்றேன்
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ? போந்தார்போந் தெண்ணிக்கொள்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய். 15

*நாயகனாய் நின்ற நந்தகோப னுடைய
கோயில்காப் பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே! மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை

மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்ருதே அம்மா! நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய். 16

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோ பாலா! எழுந்திராய்!
கொம்பனுர்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுருய்
அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்கா தெழுந்திராய்
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய். 17

•உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னுய்!
கந்தங் கமழுங் குழலீ! கடைதிறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 18

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினுய்! நீஉன் மணுளனை
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய். 19

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்
செப்ப முடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய். 20

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்
ஊற்ற முடையாய்! பெரியாய் உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்
மாற்றார் உனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றாது வந்துன் னடிபணியு மாபோலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ
ரெம்பாவாய். 21

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்
அங்க ணிரண்டுங்கொண் டெங்கள்மேல்
நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய் 22

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்

போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணுஉன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த [புடைய
காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய். 23

*அன்றிவ் வுலகம் அளந்தாய்; அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்ருய்
திறல்போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ்போற்றி!
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி!
குன்று குடையா வெடுத்தாய் குணம்போற்றி!
வென்று பகைகெடுக்கும் நின்கையில்
வேல்போற்றி!
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றும்யாம் வந்தோம் இரங்கேலோ
ரெம்பாவாய். 24

ஒருத்தி மகனுய்ப் பிறந்து, ஓரிரவில்
ஒருத்தி மகனுய் ஒளித்து வளரத்
தரிக்கிலா னுகித் தான்தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 25

மாலே! மணிவண்ணு! மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன் னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையாய் அருளேலோ ரெம்பாவாய். 26

*கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினல் நன்ருகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். 27

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து,
உன்றன்னைப்
பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்று மில்லாத கோவிந்தா! உன்றன்னோ
டுறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினல் உன்றன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா! நீதாராய் பறையேலோ ரெம்பாவாய்.
28

*சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்ரு மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்திற் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோ
டுற்ரேமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.
29

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
  திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
  பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
  இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
  எங்கும் திருவருள்பெற்று இன்புறுவ ரெம்பாவாய். 30

---

கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர். — நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்.

பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
  திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
  பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
  உயரரங்கற் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
  வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே



உ
சிவமயம்

# நாமாவளிகள்

---

1 நம: பார்வதீ பதயே
அரஹர மகாதேவா

2 தென்னுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

3 ஏகம்பத்துறை எந்தாய் போற்றி
பாகம்பெண்ணுரு வானுய் போற்றி

4 ஆடகமதுரை அரசே போற்றி
கூடல்இலங்கு குருமணி போற்றி

5 குவளைக்கண்ணி கூறன் காண்க
அவளும்தானும் உடனே காண்க

6 அண்ணுமலைஎம் அண்ணு போற்றி
கண்ணுரமுதக் கடலே போற்றி

7 சிற்சபேசா
சிவசிதம்பரம்

8 தேவசேனுபதயே
சிவசுப்ரமண்யம்

9 கோவிந்தநாம சங்கீர்த்தனம்
கோவிந்தா கோவிந்தா

10 நம: பார்வதீ பதயே
அரஹர மகாதேவா.

உ
சிவமயம்

# நன்னடக்கை

காலையில் எழுந்து கடவுளைப் போற்று
கால்கை கழுவிப் பால்போல் நீறணி
உருத்திராக் கத்தைக் கருத்தாய்ப் பூணு
அஞ்செழுத் தோதி அரனடி பேணு
சிவனடிப் பூசனை தினமும் பண்ணு
கற்றபா டத்தை முற்றும் சிந்தைசெய்
காலத்தி லுண்டு கலாசாலை சேர்ந்துகல்
வழியிற் பிறரொடு விளையா டாதே
ஆசான் சொல்வதை அடக்க முடன்கேள்
கேட்டபா டத்தை மீட்டும் படித்துணர்
உடன்படிப் போருடன் ஒற்றுமை யாயிரு
புத்தகம் கிழியாது வைத்துப் பேணு
நித்தம் குளித்துச் சுத்த மாயிரு
உடைஒரு சிறிதும் அழுக்கடை யாதுடு
யாவ ருடனும் இன்சொற் பேசு
கடுஞ்சொற் சொல்லிற் கண்டோர் பகைப்பர்
கெட்ட பழக்கம் சற்றுமொட் டாதிரு
புத்தகஞ் சுவரிவை பொலன்கெ டக்கிறேல்
உண்மையும் நேர்மையும் உறற்பா லனவே
சீவகா ருணியம் சிறந்த ஒழுக்கம்
தந்தையும் தாயும் வந்தனைக் குரியர்
குருவை வழிபடல் பெரிய கடமை
ஒழுங்குடன் கருமமே ஓர்ந்துகண் ணுயிரு
கடவுளை நினைத்துக் கற்றபடி நட

---

வசந்தா பிரஸ், தேவகோட்டை.